

# பூக்கள்

தனிச்சுற்றுக்கு மட்டும்
இது ஒரு நன்கொடை இதழ்



**மே-1989**

சுக்ல-வைகாசி

ஆசிரியர்: சுப. செந்தமிழன்

தாய் தீப்பாய்ந்தாளுக்கு வணக்கம்
தமிழ் அன்னைக்கு வணக்கம்.

# பூக்கள்.

பூ: 1 ☼ இதழ்: 1

ஆசிரியர்:
சுப. செந்தமிழன்,
எண். 8, ராசசேகரன் தெரு,
(நீதிமன்றம் பின்புறம்)
சிவகங்கை - 623 560
பசும்பொன் தேவர் திருமகன் மாவட்டம்



நன்கொடை: ரூ. 2/-

தமிழ்நாடே வாழ்க – எம்
தாய்நாடே வாழ்க
அமிழ்தாகிய இயலிசை கூத்தென்னும்
தமிழாகிய உயிர்தழையும் விழுமிய தமிழ்நாடே வாழ்க!
– புரட்சிக்கவிஞர் பாரதிதாசனார்

# பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரனார்

## பாடல்கள்.



எதிலும் துணிஞ்சு இறங்கனும் - நீ
ஏங்கி எதுக்கு துடிக்கனும்?
நாளை நாளை என்று பொன்னான
நாளைக் கெடுப்பவன் குருடன்
நடந்துபோனதை நெனச்சு ஒடம்பு
நலிஞ்சு போறவன் மடையன் - சுத்தமடையன்
நம்மைப் போல் கெடச்சதை தின்னு
நெனச்சதை செய்யிறவன் மனுஷன்.

– கல்யாணசுந்தரனார்



ஒரு குறையும் செய்யாமே
உலகத்தில் யாருமில்லே – அப்படி
உத்தமனாய் வாழ்ந்தவனை - இந்த உலகம்
ஒதைக்காம விட்டதில்லே.

– கல்யாணசுந்தரனார்.



ஆளும் வளரனும், அறிவும் வளரனும்
அதுதாண்டா வளர்ச்சி
ஆசையோடு ஈன்றவளுக்கு
அதுவே நீ தரும் மகிழ்ச்சி!

- கல்யாணசுந்தரனார்

# ஒற்றுமைக்கு உலை வைக்கும் தொலைக்காட்சி

எங்களுக்கு பிரிவினை எண்ணம் இல்லை. இந்திய அரசு மேற்கொள்ளும் மொழிக்கொள்கையே பிரிவினைக்கு வழி கோலுகின்றது.

அறிஞர் அண்ணா.

தமிழகத்தில் 1937லிருந்தே இந்தி திணிப்பு எதிர்க்கப் படுகின்றது. ஆனால் மத்திய அரசு மக்கள் உணர்வை மதித்து திருந்துவது போல் தெரியவில்லை. அதன் காரண மாகத்தான் தமிழகத்தில் 1965ல் வரலாற்றுப் புகழ்மிக்க இந்தி எதிர்ப்புப் போர் தொடங்கியது. இதைக்கண்டும் மத்திய அரசு திருந்தவில்லை அதன் விளைவாக 1967ல் காங்கிரசு படுதோல்வி கண்டது. தமிழகம் என்றும் இந்தியை ஏற்றுக்கொள்ளாது. இந்தியை எதிர்க்கும் கட்சிகளுக்கே தமிழகத்தில் இடமுண்டு என்பதை 1967லிருந்து 1989 வரை தெள்ளத்தெளிவாக தமிழக மக்கள் தேர்தல் வழியாக உணர்த்தி வருகின்றனர். ஆனால் ஆதிக்க வடநாட்டு அரசோ தன் நிலையை மாற்றிக் கொள்ளவில்லை தமிழகத் தில் இந்தியை திணிக்க பலவழிகளிலும் முயன்று தோற்ற நடுவன அரசு தற்பொழுது தொலைக்காட்சி வழியே இந்தியைத் திணிக்க முயல்கின்றது. இந்தி மாநிலத்தில் இந்தியில் மிகுதியாக நிகழ்ச்சிகளை தொலைக்காட்சி ஒளி பரப்புகின்றது. ஆனால் தமிழகத்தில் தமிழ் நிகழ்ச்சிகள் மிக குறைந்த அளவிலேயே ஒளிபரப்பப்படுகின்றது. இது என்ன நீதி? ஒற்றுமை என்பது சொல்லில் தானா? செயலில் இல்லையா? என்று மக்கள் கேட்கின்றார்கள். ஒற்றுமை என்ற பெயரில் இந்தியின் ஆதிக்கமா? எவனுமே தனது தாய்மொழியை, தாய் நிலத்தை விட்டுக்கொடுக்க மாட்டான். எடுத்துக்காட்டுக்கு இங்கே ஒன்றை குறிப்பிட விரும்புகின் றேன். மத்திய உள்துறை அமைச்சர் ப. சிதம்பரம் அவர்கள் பேசுவது தேசியம். ஆனால் அவரது எண்ணமோ மிக மிக குறுகிய வட்டத்திலேயே உள்ளது. சிதம்பரம் அவர்கள் பசும்பொன் மாவட்ட நீதிமன்றத்தை காரைக்குடிக்கு கொண்டுசெல்ல முயற்சிக்கின்றார் என்று மக்கள் பரவலாக பேசுகின்றார்கள். இதிலிருந்து நமக்குத் தெரிவது என்ன? அவர் என்னதான் தீவிரமாக தேசியம் பேசினாலும் அவரது நெஞ்சில் இருப்பது தனது ஊர் என்ற பற்றேயாகும். இது இயற்கை. இந்த உணர்ச்சிக்குப் புறம்பாக நடந்துகொண்ட அரசுகள் வீழ்ச்சியடைந்துள்ளதை சரித்திரம் நமக்கு சான் றுடன் காட்டுகின்றது. எனவே தொலைக்காட்சியின் மூல

மாக இந்தியை திணித்து ஒற்றுமைக்கு உலை வைக்காதீர்கள். அந்தந்த மாநிலங்களில் அந்த மாநில மொழி நிகழ்ச்சிகளுக்கு அதிக முக்கியத்துவம் கொடுக்கவேண்டும். இதற்கு மாறாக இந்தி ஆதிக்க வெறியுடன் திணிப்பு நடைபெற்றால் தோல்விதான் உங்களுக்கு மிஞ்சும்.

---

# பூக்கள்.

– இராசகுமாரிசெந்தமிழன்

மல்லிகைப்பூ. மணமிக்க மல்லிகைப்பூ தலைவலியை நீக்கும் மல்லிகைப்பூ தைலம் தேகத்திற்கு குளிர்ச்சி தரும் சரும நோய்கள் வராது. கட்டியைக் கரைக்கும்.

சூரியகாந்திப்பூ: இது பெரிய பூ. சூரியகாந்தி எண்ணெய் உடல்நலத்திற்கு ஏற்றது. எப்பொழுதும் சூரியனைப் பார்த்தபடியே இருக்கும்.

மகிழம்பூ: மகிழம்பூவின் வாசனை மற்ற பூக்களிலிருந்து மாறுபட்டது. மகிழம்பூவை காய்ச்சி குடிநீர் செய்து சாப்பிட்டால் உடல் நலம் பெறும்.

செண்பகப்பூ: குற்றாலத்தில் செண்பகப்பூ மிகுந்து காணப்படுகின்றது. சித்திரை, வைகாசியில் பூக்கும். இப்பூவில் தயார் செய்யப்படும் குடிநீர் சுரத்தை தணிக்கும். மேக நோயை நீக்கும்.

ரோசாப்பூ: அழகிய பூவான ரோசாப்பூவிலிருந்து செய்யப்படும் குல்கந்து உடல்நலத்திற்கு ஏற்றது. ரோசாப்பூவை முகந்தால் சளி போகும். மென்று தின்றால் வயிறு சுத்தமாகும்.

வெண்தாமரைப்பூ: வெண்தாமரை சர்பத் மூளைக்கு நல்லது. ஈரல் நோயைக் கட்டுப்படுத்தும். தாமரை நார் அரைஞான் நரம்புகளுக்கு நல்லது.

குங்குமப்பூ: குங்குமப்பூ + தண்ணீர் – மந்தம் நீக்கும்
குங்குமப்பூ + தேன் – ரணங்களை நீக்கும்.

## திரை உலகில் முதலிடம்

1. தமிழில் முதல் பேசும் படம்: காளிதாஸ்
2. முதல் பெண் இயக்குநர்: டி. பி. ராசலெட்சுமி
3. முதலில் லட்சம் ரூபாய் ஊதியம் வாங்கிய நடிகை: K. B. சுந்தராம்பாள்
4. 600 பிரிண்டுகள் போட்ட முதல் தமிழ் படம்: சந்திரலேகா
5. தடை செய்யப்பட்ட முதல் தமிழ் படம்: தியாகபூமி
6. 110 வாரங்கள் ஒரே திரையரங்கில் ஓடியதன் படம்: ஹரிதாஸ்

நன்றி - முத்தாரம் தி. மு. க. - தருமராசன்

---

## புரட்சிகவிஞர் பாரதிதாசன் பற்றி சில சுவையான செய்திகள்

- வீர. செயராமன், சிவகங்கை.

1. உலகத்திற்கு அவர் புரட்சிக் கவிஞர். ஆனால் புதுவை மக்களுக்கோ அவர் வாத்தியார். வாத்தியார் என்று தான் புதுவை மக்கள் அவரை அழைப்பார்கள்,

2. புதுவையில் நடைபெற்ற கவிதாமண்டலம் பத்திரிகையில் ஆசிரியராக இருந்தார். அதற்காக கவிஞர் பெற்ற ஊதியம் ரூ. 80 ஆகும்.

3. வளையாபதி என்னும் படத்திற்கு பாரதிதாசன் வசனம் எழுதியுள்ளார்.

4, பாரதிதாசன் முதன்முதலில் எழுதிய சினிமாப் பாட்டு பக்காத் திருடன் என்ற படத்திற்குத் தான் அதற்காக அவர் பெற்ற ஊதியம் ரு. 50/-

5. நாம் புதிதாக யாரையாவது பாரதிதாசனிடம் அழைத்துச் சென்றால் யார் இந்தப் பிள்ளையாண்டார் என்று கேட்பார். சின்னஞ்சிறுசுகள் என்பதற்கு நஞ்சானும் குஞ்சானும் என்பார்.

6 பாரதிதாசன் அடிக்கடி பயன்படுத்தும் சொல், இது என்ன ஒழுங்கு?

7. ஒரே சிக்கல் என்பதற்கு பாரதிதாசன் கோந்த செம்மிந்தலு என்பார்.

# ,,விடுதலைப் போரை தொடங்கி வைத்த வீர மருதுபாண்டியர்''

எம் நடனன்
எம். பாலகிருஷ்ணன் MA. B.ET
சிவகங்கை-623560


சின்ன மருது பெரிய மருது

ஆசிரியர் பாலகிருஷ்ணன் அவர்கள் "விடுதலைப் போரை தொடங்கி வைத்த மருதுபாண்டியர்'' என்ற தலைப்பில் பேரேட்டில் 110 பக்கங்களில் மருதுபாண்டியர் வரலாற்றை அவர்களது வாழ்க்கையில் நடந்த சுவையான செய்திகளை அக்காலத்து முக்கிய நிகழ்ச்சிகளை மிகத்தெளிவாக விரிவாக எழுதியுள்ளார். மருதுபாண்டியர்களின் வரலாறு சுருக்கமாக தொகுக்கப்பட்டு இங்கே தரப்பட்டுள்ளது.

சேதுபதி நாடு என்று அழைக்கப்படும் இராமநாதபுரத்தில் கிபி 1736-1748ம் ஆண்டுக்கு இடைப்பட்டக் காலத்தில் சிவகுமார் முத்துவிசயரகுநாத சேதுபதி என்பவர் ஆட்சி புரிந்து வந்தார். அவரிடம் மொக்கப் பழனியப்பன் சேர்வை என்பவர் சிப்பாயாகப் பணியாற்றினார். மொக்கப் பழனியப்ப சேர்வையின் தலபதி வெள்ளையன் சேர்வை. அவரது நினைவாக "வெள்ளையர்" என்ற பெயரை எடுத்துக் கொண்டு சிவகங்கைக்கு அருகிலுள்ள கீழ வாணியங்குடி கிராமத்தில் எழுந்தருளியுள்ள அவர்களது குல தெய்வமான மருதப்பசாமி என்ற பெயரையும் இணைத்து தனது மகனுக்கு 'வெள்ளை மருது' என்று பெயரிட்டார். 1753ல் சின்னமருது பிறந்தார். மருதிருவர்கள் படைப் பயிற்சியில் காட்டிய ஆர்வத்தை படிப்பில் காட்டவில்லை. பெரியமருதுவும், சின்னமருதுவும் அடர்ந்த காடுகளில் சென்று வேட்டையாடி வருவார்கள்.

தை மாதம் 13உ (1730) சிவகங்கைச் சீமை இராமநாத புரம் ஜமீனிலிருந்து பிரிக்கப்பட்டது. அதன் முதல் அரசர் சசிவர்ணத்தேவர். அவருக்குப் பின் அவரது செல்வர் முத்துவடுகநாதர் என்ற பெரிய உடையாத்தேவர் ஆட்சிக்கு வந்தார். முத்துவடுகநாதரிடம் பெரியமருதுவும், சின்னமருதுவும் பணியாட்களாக சேர்ந்தனர். அதற்கு காரணமாக இருந்தவர் சிவகங்கை சமஸ்தானத்தில் பிரதானியாக இருந்த தாண்டவராய பிள்ளையாகும்.

சிவகங்கை அரசர் முத்துவடுகநாதர் வேட்டையாடுவதில் மிக்க விருப்பம் மிக்கவர். ஒரு சமயம் முத்துவடுகநாதர் வேட்டையாடச் சென்றார். அச்சமயம் புலி ஒன்று அவர் மீது பாய்ந்தது. உடனே அவருடன் வேட்டைக்கு வந்த பெரியமருதுவும், சின்னமருதுவும் வேங்கையைக் கொன்று அரசரைக் காப்பாற்றினார்கள். ஆதனால் மன்னரும் இவர்களது வீரத்தைப் பாராட்டி பரிசுகள் வழங்கி, பதவி உயர்வும் அளித்தார். மருது சகோதரர்கள் சேனைத் தள, கர்த்தர்களாக ஆயினர் அந்நாளில் வீரத்தில் சிறந்தவர் களை பாண்டியர்கள் என அழைப்பது வழக்கம். அரசனை புலியிடமிருந்து காப்பாற்றி பெரியமருதுவும், சின்னமருதுவும் பாண்டியர் என்னும் சிறப்புப் பெயர் பெற்று மருது பாண்டியர் என்னும் சிறப்புப் பெயர் பெற்று மருதுபாண்டியர் ஆயினர்.

சிவகங்கை பாதுகாப்பிற்காகவும், நிர்வாகச் செலவிற்காகவும் சிவகங்கைஅரசர் முத்துவடுகநாதர் புதுக்கோட்டை அரசரிடமும், ஆற்காட்டு நவாப்பிடமும் ஒரு குறிப்பிட்டத் தொகையை கடனாகப் பெற்றிருந்தார். அதைத்திருப்பிச் செலுத்துவதில் தாமதம் ஏற்பட்டதால் சிவகங்கை அரசரின் கடனை வசூலிக்க ஆற்காடு நவாப் முகமது அலி ஆங்கிலேயர் உதவியை நாடினார். அச்சமயத்தில் மதுரையில் முகமது அலியின் பிரதிநிதியாக இருந்த கான்சாகிப் சிவகங்கையின் மீது படையெடுக்கப் போவதாக சிவகங்கை அரசருக்கு ஓலை ஒன்று அனுப்பினார். இச்சமயத்தில் சிவகங்கை அரசர் முத்துவடுகநாதர் தலைநகரை சிவகங்கையிலிருந்து காளையார்கோவிலுக்கு மாற்றினார்.

**காளையார் கோவிலில் போர்:** புதுக்கோட்டை தொண்டைமான் படைகளும், நவாபின் படைகளும், கும்பெனி படைகளும் காளையார்கோவில் வந்து சேர்ந்தது. 1772ம் ஆண்டு மே மாதம் 26ம் தேதி (26—5—1772) சிவகங்கை அரசர் முத்துவடுகநாதர் நட்டநடுசியல் தனியாக நின்று கூட்டமாக வந்த கும்பினிப் படையை எதிர்த்து வீரமரணம் அடைந்தார்.

அதன்பின் வீரமங்கை ராணி வேலு நாச்சியாரும் போரில் குதித்து பகைவர்களைக்கொன்று குவித்துதி இந்ய விடுதலைக்கு வித்திட்ட முதல் வீரமங்கை என்று பெயரும் பெற்றார். மருதிருவர்களும் போர்களத்தில் புகுந்து கடும் போரிட்டனர். இறுதியில் கோட்டையை பகைவர்கள் கைப்பற்றினார்கள். ஆங்கிலேய படைக்கு கர்னல்பான்ஸோர், கர்னல்அக்னியூ ஆகிய இருவரும் தலைமை தாங்கி போரை நடத்தினர். சிவகங்கைச் சீமை நவாபின் ஆளுகைக்கு உட்பட்டது.

ராணி வேலுநாச்சியார், அவரது மகள் வெள்ளை நாச்சியார் தளபதி தாண்டவராயன்பிள்ளை ஆகிய மூவரும் திண்டுக்கல்லை அடுத்துள்ள விருப்பாட்சி என்னுமிடத்தை அடைந்தனர். திண்டுக்கல் கோட்டையிலிருந்த மைசூர் மன்னர் ஹைதர் அலியின் உதவியை நாடினர். "உலகத்தின் ஒரே எதிரி ஆங்கில கும்பெனிப் படையே" என்று கூறுபவர் ஹைதர் அலி. எனவே ஆங்கிலேயரை எதிர்க்க ராணி வேலுநாச்சியாருக்கு படை கொடுத்து உதவ முன் வந்தார் ஹைதர் அலி. அவர்கள் இணைவதை விரும்பாத நவாப் சிவகங்கைக்கு வருமாறு வேலுநாச்சியாருக்கும், மருதுபாண்டியர்களுக்கும் அழைப்பு அனுப்பிவர ஏற்பாடு செய்தான்.

எட்டாண்டுகளுக்கு பிறகு சிவகங்கைச் சீமைக்கு வீர மங்கை வேலு நாச்சியாரும், மருதிருவர்களும் வந்து சேர்ந்தனர். மக்கள் மகிழ்ச்சியுடன் வரவேற்றனர். சிவகங்கைச் சீமையை நிர்வாகிக்கும் பொறுப்பை வீர மங்கை ராணி வேலுநாச்சியார் மருதிருவரிடம் கொடுத்தார். சின்னமருதுவே நாட்டின் நிர்வாகத்தை ஏற்று நடத்தினார் பெரியமருது வேட்டையாடுவதில் நாட்டம் மிக்கவராக இருந்தார்.

மருதிருவர்கள் ஆட்சிபொறுப்பை ஏற்றதும் சிவகங்கை அரசர் முத்துவடுக நாதர் ஆற்காடு நவாப் முகமது அலியிடமிருந்து வாங்கியிருந்த ஒரு லட்சம் ரூபாய் கடனை திருப்பிச் செலுத்தி சிவகங்கையை மீட்டனர் முத்துவடுக நாதருக்குப் பின சிவகங்கையை நிர்வாகம் செய்ய ஒரு உயில் சாசனத்தினை ராணி வேலுநாச்சியாரிடம் பெற்றனர். கிபி 1780ல் சிவகங்கை அரசு மருதுபாண்டியர்கள் நிர்வாகத்தின் கீழ் வந்தது. சின்னமருது நிர்வாக அலுவலராகப் பொறுப்பேற்றார்.

சின்னமருது வீட்டுப் பெரிய கதவுகள் இரவு பகல் எப்பொழுதும் திறந்தே கிடந்தன. யாரும் எந்நேரமும் நேரில் சென்று தம் குறைகளைக் கூற உரிமை இருந்தது என்று ஆங்கில தளபதி மேஜர் ஜேம்ஸ்வெல்டி மருதுபாண்டியர் நிர்வாகத்தை சிறப்பித்துக் கூறுகின்றார்.

அறப்பணிகள். சிவகங்கையில் சுவாமி சுப்பிரமணியர் கோவில் கட்டினார். முத்துவடுகநாதரின் வேண்டுதலை நிறைவேற்றும் பொருட்டே இக்கோவில் கட்டப்பட்டது. காளையார்கோவில் காளீசுவரரை கண்கண்ட தெய்வமாக மருதிருவர்கள் போற்றினர். காளீசுவரர் கோவிலின் தென் புற இராசகோபுரத்தை மருதுபாண்டியர் கட்டினர். இக் கோவிலின் உயரம் 151 அடியாகும். மானாமதுரையிலி ருந்து செங்கற்களும், கருமலையிலிருந்து கற்களும் கொண்டு வரப்பட்டு இக்கோவில் கட்டப்பெற்றது. இக்கோவிலுக்கு பெரிய தேரினையும் மருதுபாண்டியர் உருவாக்கிக் கொடுத் தனர். இக்கோவிலிலுள்ள திருவாட்சி விளக்குகள் மருத ராசரால் வழங்கப்பட்டது. குன்றக்குடியில் மலைமேல் கோபுரமும், அழகிய மண்டபமும் மருதராசரால் கட்டப்பட் டது. இங்குள்ள மருதாபுரிகுளம் மருதராசரால் உருவாக்கப் பட்டது. முருகப்பெருமானுக்கு விலை மதிப்பற்ற கவசம் வழங்கப்பட்டது. கோவில் எதிரில் இருந்த மருதுபாண்டியர் அரண்மனை பாழடைந்த நிலையிலுள் ளது. மருதுபாண்டியர்கள் மதுரை மீனாட்சி அம்மன் சன்னதிக்கு இரண்டு திருவாட்சி விளக்குகளை செய்து காணிக்கையாக வழங்கினர்: இக்கோவில் திருமண மண்டபம் மருதிருவரால் கட்டப்பெற்றது. மானாமதுரை, திருப்புத்தூர், திருப்பாச்சேத்தி, திருச்சுழி, திருப்புவனம் மற்றும் பல ஊர்களிலும் ஆலயப்பணிகள் மருதுபாண்டியர் களால் செய்யப்பெற்றது. திருக்கோட்டியூரில் எழுந்தருளி யுள்ள சௌமிநாராயணன் கோவில் தேரும், அவ்வூரில் திருக்குளம் ஒன்றும் மருதுபாண்டியர்களால் கட்டப்பட்டது. திருவில்லிப்புத்தூர் கோவிலுக்கு தேர் ஒன்றும் செய்து கொடுத்தனர். சிவகங்கை நகரில் தனது தாயார் பெயரில் பொன்னத்தாள் குளத்தையும், தந்தையார் பெயரால் உடையார் சேர்வை ஊரணியையும் உருவாக்கினார்கள். சருகணி பாதிரி அருளப்பர் பெரியமருது ஆங்கில சிப்பாய் களால் துரத்தப்பட்டு ஓடிவந்தபொழுது அவருக்கு அடைக்கலம் தந்து ஆதரவு அளித்தார். அந்த நன்றி கடனுக்காக 1780ம் ஆண்டு பெரியமருது செப்புப் பட்டயம் மூலமாக சருகணி கிராமத்தை தேவாலயத்திற்கு மானியமாக அளித்தார்.

புலவர்கள்: கமுதி நாட்டுப் புலவர், சர்க்கரைப் புலவர், சவ்வாதுப்புலவர், மதுரகவிராயர். கவிகுஞ்சரபாரதி, மூத்து குட்டிப்புலவர், மாம்பழக் கவிராயர், இராமானுசகவிராயர், சோமசுந்தரகாரு, அருணாசலக்கவிராயர், சங்கரநாராயண அவதாணி, வில்லியப்பபிள்ளை, குழந்தைக்கவிராயர், கந்தசாமிப் புலவர் ஆகியோர்கள் மருதிருவர்களின் வீரம்,

புகழ் ஆகியவற்றைப் புகழ்ந்து பாடியுள்ளனர். விடுதலைப் போரில் உதயபெருமாள் என்பவன் வீரமாய் போரிட்டு உயிர் நீத்தான். அவனது சொந்த ஊராகிய திருப்பாச்சேத்தியில் அவனுக்கு மருதரசர்கள் சிலை அமைத்து சிறப்பித்தனர்.

**வீரசங்கம்:** அந்நியர் ஆட்சியை எதிர்த்து போராடுவதற்காக மருதுபாண்டியர்கள் சிவகங்கையில் வீரசங்கத்தை உருவாக்கினார்கள். இச்சங்கம் விடுதலை வேட்கை கொண்ட வீரர்களால் உருவாக்கப்பட்டது- இந்த அமைப்புகளை பரவலாக அமைக்கும் பொறுப்பில் சின்னமருது தீவிரமாக இருந்தார்.

4—8—1783ல் ஆங்கில தளபதி புல்லர்ட்டன் சிவகங்கைக்கு வந்து மருதுபாண்டியரிடம் கம்பெனிக்கு சேரவேண்டிய வரிப்பணத்தை கட்டுமாறும், கட்டாவிட்டால் போர் தொடுக்க நேரிடும் என்றும் எச்சரிக்கை செய்தான். மருதுபாண்டியர் அதற்கு உடன்படவில்லை. பேச்சு வார்த்தைக்கு உடன்படுவதாக புல்லர்ட்டன் கூறினார். மருதுபாண்டியரின் அமைச்சர் நைனப்பன் சேர்வை புல்லர்ட்டனுடன் பேச்சு வார்த்தையில் கலந்து கொண்டார். பேச்சு வார்த்தையின் இறுதியில் ஆங்கிலேயருக்கு கட்டவேண்டிய வரி பாக்கியில் ஒரு பகுதியாக ரூ. 40,000 ஆங்கிலேயருக்கு செலுத்தப்பட்டது.

**ஊமைத்துரை வருகை:** மருதுபாண்டியர்கள் வீரபாண்டியனுக்கு துணை நிற்பதாக வெள்ளையர் ஆதிக்கம் குற்றஞ் சாட்டியது. இதன் காரணமாக மருதுவின் படைகளுக்கும், ஆங்கிலக்கும்பினி படைகளுக்கும் இடையே 1—6—1799ல் பழமனேரி என்ற இடத்தில் போர் நடைபெற்றது. இப்போரில் கும்பினிப்படை பின்வாங்கியது. மருதுபாண்டியர்கள் தொடர்ந்து விடுதலை வீரர்களுக்கு துணை புரிந்தனர். 16—10—1799ம் நாளன்று பாஞ்சாலங்குறிச்சியில் வீரபாண்டிய கட்டபொம்மன் தூக்கிலிடப்பட்டான். அவன் மரணத்திற்குப் பின் நெல்லை வீரசங்கத்திற்கு மருதுவே காப்பாளர் ஆனார். தென்னகத்திலுள்ள விடுதலை வீரர்களுக்கு எல்லாம் மருதிருவர் துணைபுரிந்தனர்.

ஊமைத்துரையும், அவரது குழுவினரும் சிறையிலிருந்து தப்பி 22—5—1801ல் சிவகங்கை வந்து சேர்ந்தனர். ஊமைத்துரையையும் அவரது குழுவினரையும் மருதிருவர்கள் வரவேற்று சிறப்பித்தனர். கிராமப் பகுதிகளில் சிவகெங்கைக்கு வினை கொட்டுமேளத்துடன் வந்ததுஎன்று இதனைக் கூறினர். ஊமைத்துரை சிவகங்கை வந்ததும்

சின்னமருது அவனுக்கு அடைக்கலம் கொடுத்ததும் வெள்ளை ஆதிக்க கலெக்டர் எஸ். ஆர். ஷிங்கடனுக்கு அவன் மீது ஆத்திரமும், கோபமும் கொள்ளச் செய்தது. சின்னமருதுவுடனோ, அல்லது அவனது கூட்டாளிகளுடனோ தொடர்பு வைத்துக்கொள்பவர்கள் குற்றவாளிகளாக கருதப்படுவார்கள் என்று கர்னல் அக்னியூ ஒரு அறிக்கை வழியே 12–06–1801ல் பிரகடனப்படுத்தினார்.

**மருதுவின ஜம்புத்தீவப்பிரகடனம்:-** ஆங்கிலேயர்களுக்கு எதிராக மருதிருவர்கள் தீவிர நடவடிக்கைகளில் இறங்கினார்கள். இந்நிலையில் 16–07–1801ல் சின்னமருது திருச்சியில் நவாப்முகமது அலியின் திருச்சி கோட்டையின் வாயிற்கதவிலும், திருவரங்கம் ரெங்கநாதபெருமாள்கோவில் சுவரிலும் தென்னிந்திய தீபகற்பத்தில் வாழும் மக்களுக்காக ஒரு பிரகடனத்தை ஒட்டினார்.

அந்நிய ஆதிக்கத்தை எதிர்த்தும் ஆங்கிலேயர் நவாப் ஆகியோர் வருவதற்கு முன்னர் அரிசி சாப்பிட்டவர்கள் அடிமைகளானதும் கஞ்சிநீர் அருந்தும் நிலை வந்ததர்கவும் அவர்களது செயல் கருவைக் கலைக்கும்படி உள்ளது என்றும் ஐரோப்பிய ரத்தம் நம்மை ஒற்றுமைப்படுத்தாது எனவும் கோபம் கொப்பளிக்க ஆவேச உணர்வுடன் அந்தப் பிரகடனம் எழுதப்பட்டிருந்தது அன்னிய ஆதிக்கத்தை மக்கள் ஒன்றுபட்டு ஆயுதப்புரட்சியின் மூலம் வெளியேற வேண்டுமென்று குறிப்பிட்டிருந்தது.

**வீரப்போர்:** கர்னல் அக்னியூ 26–5–1801ல் தனது படைகளுடன் சிவகங்கை வந்து சேர்ந்தார். அவருடன் மேஜர் கிரே, மேஜர் ஷெப்பர்டு ஆகியோரின் படைகளும் வந்து சேர்ந்து கொண்டன. தளபதி இன்ஸ் தனது படையுடன் திருப்புத்தூருக்கு வந்து பிரான்மலை கற்கோட்டையை தகர்க்க முயன்று தோற்றார். 28–07–1801ல் சிவகங்கை ஒக்கூரில் மருதுபாண்டியர் படைகளும் தளபதி இன்ஸ் படைகளும் மோதிக்கொண்டன.

"இந்த மண்ணில் பிறந்தோம், இந்த மண்ணில் வளர்ந்தோம், இந்த மண்ணிலேயே சாகப்போகிறோம். ஆனால் அந்நியன் துப்பாக்கிக்கு முன் அடிபணியோம் என்று சின்ன மருது முழங்கினான்"

**சிறுவயல்:** போரின் காரணமாக சிறுவயல் செருவயல் ஆனது. 30–07–1801–ல் மருதுபாண்டியர்களுக்கும் வெள்ளையர்படைகளுக்கும் கடும்போர் ஏற்பட்டது. சிறுவயல் தீக்கிரையாகியது.

காளையார்கோவில்: 31—07—1801ல் காளையார்கோவில் நோக்கி ஆங்கிலப்படை புறப்பட்டது. 15—8—1801ல் மருது படையினர் ஷெப்டு அலியைத் தாக்கினர். 200 வீரர்கள் கொல்லப்பட்டனர். பலர் காயமடைந்தனர். 19—08—1801ல் ஆங்கிலப்படைகளுக்கும் மருதுவின் படைகளுக்கும் கடும் போர் நடந்தது வெள்ளையர்கள் நவீன பீரங்கிகள், துப்பாக்கிகளைப் பயன்படுத்தியதால் மருது படை தோல்வியுற்றது. இந்நிலையில் வெள்ளையர் அரசு சிவகங்கைச் சீமையை ஆண்டுவந்த இரண்டாவது ராணி வேலு நாச்சியார் கணவர் வேங்கை உடையணராசாவை நீக்கிவிட்டு தனக்கு ஆதரவாளரான படமாத்தூர் உடையணத்தேவரை 1801ல் அரியணையில் அமர்த்தியது.

1-10-1801ல் காளையார்கோவிலில் கடும்போர் நடைபெற்றது. வெள்ளையர் படை மருதுபாண்டியரின் இருப்பிடமான பாண்டியன் கோட்டையைத் தாக்கி கைப்பற்றியது. ஆனால் மருதிருவர்கள் அங்கிருந்து தப்பிவிட்டனர். பெரிய மருது அவரது செல்வர். சின்னமருது அவரது செல்வர்கள், ஊமைத்துரை( முத்துக்கருப்பத்தேவர் ஆகியோரை பிடித்து தருபவர்களுக்கு பரிசுகள் தருவதாக ஆங்கிலகும்பெனி அரசு அறிவித்தது.

சோழபுரம்: சோழபுரத்தில் ஒருசமயம் சின்னமருது சோழபுரத்திற்கு வந்து அங்கிருந்த கும்பெனி படைகளைத் தாக்க முயன்றபோது ஆங்கிலப்படை சின்னமருதுவை துப்பாக்கியால் சுட்டுக் காயங்களுடன் 1801ம் ஆண்டு அக்டோபர்19ல் கைது செய்தனர்.

காளையார்கோவில்: காளையார்கோவில் கானகத்தில் வெள்ளைமருதுவின் செல்வர்களான கருத்தத்தம்பி, மூளிக்குட்டித்தம்பி கைது செய்யப்பட்டனர். சிங்கம்புணரியில் பெரியமருதுவும், சின்னமருதுவின் செல்வர் செவத்தத்தம்பி கைது செய்யப்பட்டனர். மதுரை அருகே சின்னமருதுவின் இளைய மகன் துரைசாமி கைது செய்யப்பட்டான்.

திருப்பத்தூரில்: பசும்பொன் தேவர் திருமகன் மாவட்டம் திருப்புத்தூரில் [தற்போது சுவிசு மருத்துவமனை இயங்கும் பகுதியில்] 24—10—1801ல் சின்னமருது. செவத்தத்தம்பி முத்துசாமி, முகவைமுத்துகருப்பத்தேவர் மற்றும் பலர் தூக்கிலிடப்பட்டனர்.

27—10—1801-ல் பெரியமருதுவும், கருத்தத்தம்பி, மூளிக்குட்டித்தம்பி மற்றும் பலரும் திருப்புத்தூரில் அதே இடத்தில் தூக்கிலிடப்பட்டனர்.

வாழ்க மருதுபாண்டியர் புகழ்.



# எழுத்தாளர்களின் நிலை

- அறிஞர் அண்ணா -

மேலை நாடுகளில் ஒரே ஒரு புத்தகம் எழுதினாலேஒருவர் தம் வாழ் நாளைக்கழித்து விடமுடியும்;- அதில் கிடைக்கும் வருவாயைக் கொண்டு• இங்கோ ஒர் ஆசிரியர் ஒரு புத்தகத்தை வெளியிட்டார் என்றால் அந்த புத்தகத்தை அச்சிடுவதற்கு அவர் பட்ட கடனை அடைக்க முடியாமல் கடன்காரர்களுக்கு அஞ்சி குடியிருந்த வீட்டையே மாற்றிக் கொண்டுபோய் விடுவார்கள். அப்படிப் பட்ட நிலை இங்கு இருக்கின்றது. இந்த புத்தகம் எழுதுவதும் அதன் மீது வருவாய் தேடுவதும் அவ்வளவு கடினம். புத்தகம் எழுதுவோரை மற்ற நாடுகளிலெல்லாம் வித்தகர்களாகப் போற்றுகின்றார்கள். இந்த நாட்டிலோ "புத்தகம் எழுதி, இருந்தப் பணத்தைப் பாழாக்கி கொண்டவர்கள், என்ற பழிச்சொல் தான் கிடைக்கும்.

20–9–87: அறிஞர் அண்ணு

தகவல் தந்தவர் - அப்துல் ராகிம்

---

நகைச்சுவை:

மனைவி: பணம் பேசும் என்கிறார்களே?

கணவன்: ஆமாம்

மனைவி: அப்படியானால் ஏதாவது கொடுத்து விட்டு ஆபீசுக்குப் போங்களேன். எனக்குத் தனியாக இருக்க பயமாக இருக்கிறது!

ஒருவன்: என் சைக்கிளை யாரோ திருடிக் கொண்டு போய்விட்டார்கள். நல்ல காலம்

மற்றவன்: நல்ல காலம் என்றால்?

அவன்: நான் சைக்கிளை ஓட்டிக்கொண்டு போகும் போது திருட்டுப் போயிருந்தால் நானும் அல்லவா காணாமல் போயிருப்பேன்.

பழ. வள்ளியப்பன் தஞ்சை

# அறிவுக்கு விருந்து

## அஞ்சல் (தபால்) பற்றிய சிறு குறிப்புகள்

- அப்துல் ரகீம்
சிவகங்கை

1. இந்தியாவில் முதன் முதலாக அக்பர் ஔரங்கசீப் காலத்தில் தான் அஞ்சல்கமுறை ஏற்பட்டது. சுமார் 150 ஆண்டுகளுக்கு முன்னால் இங்கிலாந்தில் அஞ்சல் நிலையம் ஏற பட்டது.

2. தொடக்க காலத்தில் தொலைவுக்கு ஏற்ப அஞ்சல் கட்டணம்வசூலிக்கப் பட்டது எந்த ஊருக்குகடிதம்அனுப்பினாலும் ஒரே கட்டணம் என்ற நிலையை ஏற்படுத்தியவர் ரோலண்டுஹில்கடி தங்களின் மேலுறையின் மேல் கடிதகக் கட்டணம் குறிக்கப்படும் முறையை ரோலண்டுஹில் கொண்டு வந்தார்.

3. இந்தியாவிலேயே முதல் அஞ்சல் நிலையம் 1688ல் கொண்டு வரப்பட்டது. 1853ல் தான் ரயில் மூலம் கடிதங்கள் கொண்டு செல்லப்பட்டது. 1949ல் இந்தியாவில் திரு ரபி அகமத்கித்வாய் இரவு விமான அஞ்சல் முறையை கொண்டு வந்தார்.

4. 1877ல் V. P. P. முறை தொடங்கப்பட்டது. 1888ல் பண விடை (M. O) முறை நடை முறைக்கு வந்தது. 1855ல் சேமிப்பு வங்கி முறையை வழக்கத்திற்கு வந்தது.

# புதுக் கவிதை (நந்தவனப் பூக்கள்)

கவிஞர் பி. முருகேசன்
மதுரை

**ஏழை விருந்தாளிகள்:**

திருமண வீட்டில்
விருந்திற்கு பிறகு
எடுத்து
எறியப்படும்
எச்சில்
இலைகளுக்காக
காத்திருக்கும்
ஏழை விருந்தாளிகள்!

**பல்கலைப்பட்டம்**

பணம்
இருந்தால்
பல்கலைப்
கழகத்தில்
பட்டங்கள்
பலவாங்கிடலாம்
விலை கொடுத்து
வாங்கும்
விலை மாதரைவிட
நீ கேவலமாக்கப்பட்டு
விட்டாய்

# பெண்கள் பகுதி

# சமையல்

## நன்றி-பாவை விளக்கு

### கத்தரிக்காய்ச் சட்னி

**தேவையான சாமான்கள்:**

கத்தரிக்காய்(நடுத்தரமானது)-3, உளுந்தம் பருப்பு-2 தேக்கரண்டி, வெங்காயம்(நறுக்கியது)-1 பிடி, கறிவேப்பிலை-1 பிடி, புளி-சிறிய நெல்லிக்காயளவு, பெருங்காயம்-1 சிட்டிகை, பச்சை மிளகாய்-2, காய்ந்தமிளகாய்-3, உப்பு தேவையான அளவு.

**செய்யும் முறை:** ஒரு டேபிள் கரண்டி எண்ணெயை வாணலியில் விட்டுக் காய்ந்ததும் உளுந்தம் பருப்பைச் சிவக்க விடவும். பின் மிளகாய் பெருங்காயத்தையும் சேர்த்துச் சிவந்ததும் கத்திரிக்காயை நைசாக நறுக்கிகழுவி எடுத்துக்கொண்டு அத்துடன் வெங்காயம், கறிவேப்பிலையையும் வாணலியில் கொட்டி நன்ருகச் சிவக்க விடவும். பின் இறக்கிப் புளி, பச்சைமிளகாய், உப்பு ஆகியவற்றையும் சேர்த்து அம்மியில் அரைத்து எடுக்கவும். இட்லி, தோசைக்குத் தொட்டுக்கொள்ளச் சுவையாக இருக்கும்.

### மீன், தக்காளித் தொக்கு

**தேவையான சாமான்கள்:**

மீன்-¼கிலோ, தக்காளி(நடுத்தரமானது)-3, மிளகாய்ப் பொடி-2 தேக்கரண்டி, தனியாப் பொடி-2 தேக்கரண்டி, மஞ்சள் பொடி-¼ தேக்கரண்டி, வெங்காயம் (நறுக்கியது)-50கிராம், பூண்டு(நறுக்கியது)-10 பருப்பு, கடுகு-½ தேக்கரண்டி, சீரகம்-½ தேக்கண்டி, கறிவேப்பிலை-1 பிடி, கொத்தமல்லி-பிடி, எண்ணெய்-4 டேபிள் கரண்டி, உப்பு-தேவையான அளவு.

**செய்யும் முறை:** மீனைச் சுத்தம் செய்து, கொதிக்கும் தண்ணீரிலிட்டு வேக வைத்து, முள்ளைச் சுத்தமாக நீக்கி உதிர்த்து வைத்துக்கொள்ளவும். ஒருபாத்திரத்தில் இரண்டு தம்ளர் தண்ணீரை எடுத்துக்கொண்டு, அதில் தக்காளியைப் பிசைந்து விட்டு. மிளகாய்ப் பொடி, தனியாப் பொடி, மஞ்சள் பொடி, உப்பு ஆகியவற்றைச் சேர்த்துப்பதினைந்து நிமிடங்கள் நன்ருகக் கொதிக்கவிட்டு இறக்கி வைத்துக்

கொள்ளவும். வாணலியில் எண்ணெய் விட்டுக் காய்ந்ததும் கடுகு, சீரகத்தைச் சேர்த்துச் சிவந்ததும் வெங்காயம், கறி வேப்பிலை, கொத்து மல்லி இலையைச் சேர்த்து, சிவந்த பின் இறக்கி வைத்துள்ள குழம்பை வாணலியில் ஊற்றவும். மீனையும் சேர்த்துச் சிறிது நேரம் மெதுவாகக் கலக்கிவிட்டு இறக்கவும். (தொக்காக இருப்பதற்குத் தகுந்தாற்போல் தண்ணீரைக் குறைப்பதும், சேர்ப்பதும் தேவை) பூரி, சப் பாத்தி, இட்லி, தோசை ஆகியவற்றுக்குச் சட்டினிக்குப் பதில் உபயோகப் படுத்தலாம். ருசியாக இருக்கும்.

## கவியரசு கண்ணதாசனின் குட்டிக் கதை

### ரகசியம்

திருக்கயிலாய பரம்பரை, செவ்வூர் ஆதீனம், சைவசி தாமணி சம்பந்த சுவாமிகள் மரணத்தறுவாயில் இருந்தார் அவரை வழியனுப்புவதற்காக அவரது சீடர்கள் எல்லாம் கூடியிருந்தார்கள். ஒவ்வொரு சீடனும் சம்பந்த சுவாமி களைப் பற்றி புகழ்ந்து பேசினான்.

சுவாமிகளைப் போல் ஆண்மையை அடக்கி கடும் விர தம் இருந்து பிரமச்சாரியாக வாழக்கூடியவனே அடுத்த பட்டத்திற்கு வரவேண்டுமென்று ஒவ்வொரு சீடனும் கூறி னான். "அவரைப் போல் எந்தப் பெண்ணையும் ஏறெடுத் துப் பார்க்காதவன் யார்?" என்று கேள்வி எழுந்து „நான் தான்" என்று கத்தினன் சீடன் ராமானனந்த சுவாமி.

„இல்லை! நான் தான் தான் என்று கத்தினன் மற்றொரு சீடன் சூடாமணி சுவாமி.

„இல்லை இல்லை, நானே தான் என்று கத்தினன் சீடன் பிரமானந்த சுவாமி.

'உஸ்' சத்தம் போடாதீர்கள் சூடாமணி சுவாமி தான் அதற்கு தகுதியானவன்'' என்றார் சாகக்கிடந்த சுவாமி.

''எப்படிச் சொல்கிறீர்கள்?'' என்று ஒல மிட்டார்கள் மற்றசீடர்கள்.

„அவன் என் மகன்„ என்று கூச்சலிட்ட சம்பந்த சுவாமியின் ஆவி அமைதியாக பிரிந்தது.

படித்து எழுதியவர்: சோமபுரம் சண்முகசுந்தரம்

## மக்கள் நலப்பணி மறுப்பு

சிவகங்கை ராதாகிருட்டிணன் தெருவிலுள்ள உணவு பங்கீட்டுக் கடைக்கு முன்னால் உள்ள திறந்த வெளியில் மக்கள் நலன் வேண்டி, பொருட்களை வாங்கும் மக்கள் வெயிலில் நின்று சிரமப்படுவதைத் தவிர்க்க நிழல் தரும் கீற்றுக்கொட்டகை போடுமாறு சிவகங்கை லயன்ஸ் கிளப் செயலாளர் தங்கமணியிடம் நான் கூற அவரும் எனது வேண்டுகோளை ஏற்று கீற்றுக் கொட்டகை போடுபவர்களை ரேசன் கடைக்கு அனுப்பி கீற்றுக் கொட்டகை போடச் சொன்ன பொழுது ரேசன் கடை நிருவாகிகள் கீற்றுக் கொட்டகை போட அனுமதி தர மறுத்துவிட்டனர். சிவகங்கைக்கு இந்திய தலைமை அமைச்சர் ராசீவ்காந்தி அவர்கள் சிறிதுநேரம் தான் வந்து சென்றார். அதற்காக செய்யப்பட்ட செலவுகளும், அவருக்கு கொடுக்கப்பட்ட பாதுகாப்புகளும் கணக்கில் அடங்காது: அதற்கு எல்லாம் வேகமாக நடவடிக்கை எடுக்கும் அரசு நிருவாகம் மூன்று ஆண்டுகளாக பொட்டலின் அருகிலுள்ள ரேசன் கடையில் கொளுத்தும் வெயிலில் வரிசையில் நின்று பொருட்களை வாங்கும் மக்கள் நலனுக்கு செய்தது என்ன? அவர்கள் செய்யாவிட்டாலும் பரவாயில்லை என்று மக்கள் நலன் கருதுபவர்கள் மக்கள் நலனுக்காக ரேசன் கடை முன்பு கீற்றுக் கொட்டகை போடவந்தபொழுது அனுமதி மறுத்தது எந்த வகையில் நீதியாகும்.

சுப. செந்தமிழன்

---

மே தினம் என்றால் என்ன?.

தினம் 12 மணி நேர வேலையை 8 மணி நேரமாக்கச் சொல்லி தொழிலாளர்கள் போராடி வென்ற நாள் மே 1 ஆகும். 1886ல் அமெரிக்காவிலுள்ள சிகாகோவில் இச் சம்பவம் நடைபெற்றது. தொழிலாளர்கள் வேலை நேரத்தை 8 மணி நேரமாக்கச் சொல்லி போராடினார்கள். அரசு தொழிலாளர்கள் மீது அடக்குமுறையை ஏவி விட்டது. பல தொழிலாளிகளின் உயிர் பறிக்கப்பட்டது. இறுதியல் அரசு தொழிலாளிகளின் கோரிக்கையை ஏற்று வேலை நேரத்தை 8 மணி நேரமாக்கியது.

- கம்யூனிஸ்ட் ராசேந்திரன்